# பகவத் பாதை

# BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 6 | இதழ் 6 | ஆகஸ்ட் 10, 2019 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 6 | Issue 6 | August 10th, 2019 | Annual Subscription Rs. 100/-



## விதியை வெல்வது சாத்தியமா?

பகவத் பாதை தமிழ் மாத இதழ்



பிராரப்த கர்மாவே நமது விதியாக அமைகிறது.

பிராரப்தத்தை சீரமைக்கும் வல்லமை நாம் புதிதாக செய்யும் ஆகாமியத்திற்கு மட்டுமே உண்டு.

ஆகாமியம் என்பது நம் கைகளிலேயே உள்ளது.

நமது ஆகாமியம் அனைத்தும் நற்செயலாக அமைந்து விடும் பட்சத்தில் அவையே நமது தீவினைகள் அனைத்திற்கும் மாற்று மருந்தாக அமைந்து விடுகிறது.

– ஸ்ரீ பகவத்

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555

This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075

## ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞான முகாம்



| நாள் | |
|---|---|
| 15.8.2019<br>காலை 11.00 மணிமுதல் | 18.8.2019<br>மதியம் 3.00 மணிவரை |

| விபரம் | செலவு பகிர்வு |
|---|---|
| **4 நாள் ஞான முகாம்**<br>இடம் : ஸ்ரீ பகவத் பவன், சேலம். | ரூ. 3000/-<br>மட்டும். |

முன்பதிவிற்கு

**ஸ்ரீ பகவத் மிஷன்,**

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாபேட்டை, சேலம்-3.

**79041 18421, 99942 05880, 97891 65555**

# விதியை வெல்வது சாத்தியமா?


- ஸ்ரீ பகவத்

"விதியை மதியால் வெல்லலாம்" என்று கூறுகிறார்கள்.

"விதியை மதியால் வெல்லவேண்டும் என்ற விதி இருந்தால்தான் மதியால் கூட வெல்ல முடியும்" என்றும் கூறுகிறார்கள்.

நமக்கு விதிக்கப்பட்ட விதியை நம்மால் மாற்ற முடியாதா?

நாம் செய்யும் நற்செயல்கள் புண்ணியம் என்ற பெயரில் போற்றப்படுகின்றன. அதேபோல் நாம் செய்யும் தீய செயல்கள் யாவும் பாவம் என்ற பெயரில் தூற்றப்படுகின்றன.

நாம் செய்யும் புண்ணியங்களும் பாவங்களும் நம்முடைய கர்மவினைகளாக அமைகின்றன என்றும் சாஸ்திரங்கள் விவரிக்கின்றன.

கர்மா என ஒன்று இருப்பது உண்மையாகவும் இருக்கலாம் அல்லது பொய்யாக கூட இருக்கலாம். நம்மால் நிரூபித்துக் காட்ட முடியாது.

ஆனாலும் கூட கர்மவினை கோட்பாடுகள் அனைத்தும் நற்செயல்களுக்கு அங்கீகாரம் கொடுத்து தீயச் செயல்களை புறக்கணிக்கச் சொல்வதால் அக் கோட்பாடுகளை நாம் ஏற்றுக் கொள்வதிலும் தவறில்லை.

நமது கர்மவினைகளை மூன்றாக பிரிக்கிறார்கள். சஞ்சித கர்மா, பிராரப்த கர்மா, ஆகாமிய கர்மா என பிரிக்கிறார்கள்.

பல பிறவிகளில் செய்த பாவங்களும் புண்ணியங்களும் சஞ்சித கர்மா என்ற பெயரில் சேர்ந்து கிடக்கின்றன. அவற்றையெல்லாம் நாம் அனுபவித்தே ஆக வேண்டும்.

நமது வங்கிக் கணக்கில் நமது பெயரில் 30 கோடி ரூபாய் பணம் இருப்பதாக வைத்துக் கொள்வோம். இதுதான் நம்முடைய மொத்த கையிருப்பு. மொத்த சொத்து.

அந்த முப்பது கோடி ரூபாய் பணத்தில் நாம் செலவு செய்வதற்காக 10 கோடி ரூபாய் மட்டும் எடுப்பதாக வைத்துக் கொள்வோம்.

அப்படி நமது மொத்த கர்மாவான சஞ்சித கர்மாவிலிருந்து இந்தப் பிறவியில் அனுபவிப்பதற்காக கொஞ்ச கர்மாவை எடுத்து வருகிறோம். அதுதான் பிராரப்த கர்மா என்று கூறப்படுகிறது.

செலவுக்காக நாம் எடுத்து வந்த 10 கோடி ரூபாய் பணத்தை நாம் அப்படியே செலவு மட்டும் செய்து விடாமல் அதில் 5 கோடி ரூபாயை ஒரு தொழிலில் முதலீடாக போடுகிறோம். அப்படி புதியதாக போட்ட முதலீட்டிலிருந்து புதியதாகவும் வருவாய் வருகிறது.

அப்படி நாம் அனுபவிப்பதற்காக எடுத்து வந்த கர்மாவை அனுபவிப்பதோடு மட்டும் நில்லாமல் புதிய செயல்களிலும் ஈடுபட்டு புதிய கர்மவினைகளையும் உருவாக்கி விடுகிறோம்.

இப்படி புதியதாக நாம் உருவாக்கும் கர்மாவை ஆகாமிய கர்மா என்று கூறுகிறார்கள்.

இந்த ஆகாமிய கர்மா அனைத்தும் நாமாக ஏற்படுத்திக் கொண்டவை. இவை மீண்டும் நமது மொத்த சேமிப்பில் சேர்ந்து விடுகின்றன. இவை நமது சஞ்சித கர்மாவாக மாற்றம் பெற்று விடுகின்றன.

எல்லா கர்மாக்களுடைய மூலதனமே இந்த ஆகாமியம் தான். ஆகாமிய கர்மா தான் சஞ்சித கர்மாவாக சேமிக்கப்படுகிறது. அதன்பிறகு பிராரப்த கர்மாவாக அனுபவத்துக்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது.

இப்படி எத்தனையோ பிறப்புகளில் எவ்வளவு கர்மாக்களை நாம் சேர்த்து வைத்திருந்தாலும் இந்தப் பிறப்பில் நாம் எடுத்துக் கொண்டு வந்த கர்மா மட்டும் தான் இப்போது நம்மோடு தொடர்பு உள்ளது.

இதுதான் நமது பிராரப்த கர்மா. இதுதான் நமது இப்போதைய தலைவிதி.

இவையெல்லாம் உண்மையா என்ற கேள்வியை தற்காலிகமாக விட்டுவிட்டு இவை உண்மையாகக்கூட இருக்கலாம் என்ற தற்காலிகமான முடிவுடன் இந்த கட்டுரையை தொடர்வோமாக.

நமது பிராரப்த கர்மாவை பற்றி கூறுவது தான் ஜாதகம்.

ஜாதக விற்பன்னர்களிடம் நமது பிறந்த ஜாதகத்தை கொடுப்போமாயின் நம்மைப் பற்றிய எல்லா விபரங்களையும் கூறி விடுவார்கள். இதுவரை இந்தப் பிறப்பில் நமக்கு என்னென்ன நடந்தது. இனிமேல் என்னென்ன நடக்கும் என துல்லியமாக கூறிவிடுவார்கள்.

இந்தப் பிறவியில் இதுவரை நடந்து முடிந்தது பற்றி கூட நமக்கு கவலை இல்லை. இனி நடக்கப்போகும் எதிர்காலம் பற்றி தான் நமக்கு கவலை.

எதிர்காலத்தில் நமக்காக விதிக்கப்பட்ட நிகழ்வுகள் நல்லவையாக இருக்கும் பட்சத்தில் நமக்கு கவலையில்லை. ஆனால் நாம் பலவிதமான மோசமான சம்பவங்களை சந்திக்க வேண்டும் என நமது கர்மா - விதி அமைந்திருந்தால் நாம் என்ன செய்வது?

அதை மாற்ற வேண்டாமா? மோசமான கர்மாக்களில் இருந்து நாம் விடுபட வேண்டாமா? அப்படி விடுபடுவதற்கு நாம் என்ன செய்ய வேண்டும்? விதியை வெல்லும் மார்க்கம் உண்டா? உண்டெனில் அவைகள் என்ன?

- இவைதான் கர்மாக்களை பற்றிய பலரின் கேள்வியாக இருக்கிறது.

கர்மாக்களையும் விதிகளையும் நமக்குச் சாதகமாக்கும் முயற்சியாகத்தான்; கோயில்களில் வழிபாடுகளும் பிரார்த்தனைகளும் அதிகரித்து வருகின்றன.

நமது பிரார்த்தனைகளுக்கு இரங்கி இறைவன் நமது கர்ம வினைகளிலிருந்து நம்மை விடுவிப்பாரா?

நீங்கள் ஒரு நீதிமன்றத்தில் நீதிபதியாக இருப்பதாக வைத்துக்கொள்வோம்.

கொலைக் குற்றவாளியான ஒருவனுக்கு அவனுடைய வழக்கை விசாரித்து தீர்ப்பு வழங்கும் பொறுப்பில் நீங்கள் இருக்கிறீர்கள்.

கொலைக் குற்றவாளியான அவன் உங்களை புகழ்ந்து பாடுகிறான். அவனது சொத்துக்களில் பெரும் பகுதியை உங்களுக்கே கொடுத்து விடுவதாக கூறுகிறான். அவனை விடுதலை செய்யுமாறு உங்களை பிரார்த்திக்கிறான்.

அவனுக்கு என்ன தீர்ப்பு வழங்குவீர்கள்?

"உனது கோரிக்கையை ஏற்று உன்னை விடுதலை செய்கிறேன். நீயும் வாக்கு தவறாமல் உனது சொத்துக்களை எனக்கு எழுதிக் கொடுத்துவிடு" என்று கூறுவீர்களா?

கர்ம வினைகளிலிருந்து விடுவிக்கக் கோரி நாம் கோயில்களில் சென்று பிரார்த்தனை செய்வதற்கும்

குற்றவாளி தன்னை விடுவிக்கக் கோரி நீதிபதியிடம் பிரார்த்திப்பதற்கும் வித்தியாசம் ஏதும் உண்டா?

அப்படியெனில் தெய்வங்கள் எவரும் நமக்கு உதவி செய்ய மாட்டார்களா? தெய்வங்களை கர்மபலன்தாதா என்று குறிப்பிடுவார்கள். நமக்கான கர்ம பலன்களை வழங்குவதுதான் தெய்வங்களின் வேலை. நமது பிரார்த்தனைக்கும் வேண்டுதலுக்கும் இரங்கி நமது சஞ்சிதத்திலிருந்து வேண்டுமானால் நற்பலன்களை வழங்கலாம். சஞ்சித கர்மாவிலும் இல்லாத நற்பலன்களை தெய்வங்களாலும் வழங்க முடியாது!!

ஜாதக ஜோதிடங்களில் ஈடுபாடு உள்ளவர்கள் ஒரு விவரத்தை கவனித்திருக்கலாம்.

நமது கடந்த காலத்தில் நமக்கு என்னவெல்லாம் ஏற்பட்டிருந்தது என்பதை அருகிலிருந்து பார்த்ததை போல் துல்லியமாக கூறிவிடுவார்கள். ஆனால் நம்முடைய எதிர்காலத்தைப் பற்றிய அவர்களுடைய வாக்கு - கணக்கு பாதி கூட சரியாக இருப்பதில்லை.

ஏன் இவ்வாறு உள்ளது?

நடந்து முடிந்ததைச் சரியாக காட்டும் கணித்தினால் நடக்கப்போவதை ஏன் சரியாக காட்ட முடிவதில்லை?

அவர்களுடைய கணிதம் பொய்த்துப் போவதற்கான காரணம் என்ன?

நம்முடைய பிரார்த்தனையின் காரணமாக இறைவன் நம்முடைய தலைவிதியை - கர்மாவை மாற்றி விட்டானா?

அல்லது ஜாதகமும் அதன் கணக்குகளுமே பொய்யானவைதானா?

ஜாதகமும் மற்றும் அதன் கணிதங்களும் உண்மையாக இருக்கும் பட்சத்தில் நமக்கு விதிக்கப்பட்ட தலைவிதிதான் எவ்வாறோ மாறி உள்ளது. கூறப்பட்டபடி நடக்கவில்லை. இதற்கு என்ன காரணம்?

நமது ஜாதகப்படி நமது முப்பதாவது வயதில் நமக்கு பல கோடி ரூபாய் சொத்துக்கள் வரவேண்டும் என்றும் வருவாய் தரும் நல்ல தொழிலும் அல்லது புகழ் கொடுக்கும் நல்ல பதவியும் ஏற்படும் என்றும் கூறப்பட்டுள்ளதாக வைத்துக் கொள்வோம்.

இதை வேண்டாம் என்று கூறி எவராவது கோவிலுக்குச் சென்று பிரார்த்தனைகளிலும் சிறப்பு பூஜைகளிலும் ஈடுபடுவார்களா?

ஜாதகத்தில் உள்ளபடி நடக்கட்டும் என்று வேண்டுமானால் பிரார்த்தனை செய்வார்கள்.

ஆனால் ஜாதகக் கணக்கு பொய்த்துப் போய் விடுகிறது. விதிப்படி நமக்கு நடக்க வேண்டிய நல்லவை நடக்காமல் போய் விடுகிறது. இது ஏன் இப்படி நடந்து விடுகிறது?

நல்லதுதான் நடக்கப்போவதாக நமது ஜாதகம் தீர்க்கதரிசனம் வழங்கிய போதிலும் அது நடக்க வேண்டும் என்று நாம் பிரார்த்தனை செய்த போதிலும் அது நடக்காமல் போய் விடுகிறது என்றால் நமக்கு விதிக்கப்பட்ட விதியையும் பொய்யாக்கும் ஏதோ ஒரு சக்தி இங்கு செயல்பட்டுள்ளது.

அப்படி நமது விதியையே மாற்றி அமைக்கும் அந்த சக்திதான் எது?

அது தான் நாம் இப்போது செய்து வரும் ஆகாமிய கர்மா.

இப்போது நாம் செய்யும் நற்செயல்களும் நாம் கொண்டு வந்த பிராரப்த கர்மாவை மாற்றியமைக்கின்றன.

இப்பிறப்பில் நாம் செய்யும் மோசமான செயல்கள் யாவும் நமது பாவ கர்மாவாக அமைந்து பிராரப்தத்தின்

வாயிலாக நமக்கு கிடைக்க வேண்டிய நல்ல பலன்களை எல்லாம் தடை செய்து விடுகின்றன.

இப்பிறப்பில் நாம் செய்யும் ஆகாமிய கர்மா எப்படி நமது விதிப்படி அமைந்த நல்ல அம்சங்களையெல்லாம் தடை செய்கிறதோ,

அப்படி அதே ஆகாமிய கர்மா மூலம் நாம் செய்யும் நற்செயல்கள் யாவும்

நமது விதிப்படி நமக்கு வரவேண்டிய மோசமான பலன்களையும் தடுத்து நம்மை காப்பாற்றி விடுகின்றன.

**நா**ம் ஏற்கனவே ஒரு கட்டுரையில் மனதின் செயல்பாட்டினை நான்கு வகையாக பார்த்தோம். அவை மனம், புத்தி, சித்தம், அகங்காரம்.

மனம் எல்லாவற்றையும் காட்டும். அதில் ஏதோ ஒன்றைத் தேர்ந்தெடுப்பதைத்தான் புத்தி என்கிறோம்.

நமது புத்தி தேர்ந்தெடுக்கும் முடிவுக்கு தேவையான ஆற்றலை வழங்குவது சித்தம்.

அக உணர்ச்சிகளை சீரமைக்கத் தேவையில்லை என்பதையும் அவையெல்லாம் தாமாகவே தம்மை சீரமைத்துக் கொள்ளும் என்று மனதின் இயக்கத்தையும் ஏற்கெனவே பார்த்தோம்.

இதை நமது புத்தியும் தீர்மானித்துக் கொள்ள வேண்டும்.

அப்படி தீர்மானித்தோமேயானால் நமது மன இயக்கம் முழுமையும் அதற்கு ஒத்துழைக்க ஆரம்பித்துவிடும்.

நாமாக எதுவும் அங்கு செய்யத் தேவையில்லை என்ற நிலையில் நமது மனோ இயக்கம் இயற்கையாக சுயமாக சுதந்திரமாக செயல்பட ஆரம்பித்துவிடும்.

ஆகவே நமது அக உணர்ச்சிகளை பொறுத்தவரையிலும் அங்கே நமக்கு எந்த வேலையும் கிடையாது என்பதை கண்டுபிடிப்பதோடு புத்தியின் வேலை முடிவடைந்து விடுகிறது.

மனதளவில் நமக்கு தம்மைச் சீரமைக்க எந்தப் பொறுப்பும் இல்லை என கண்டுபிடித்த நாம், புற உலகைப் பொறுத்த வரையில் தர்ம நியாயங்களின்படி அறச் செயல்களில் ஈடுபட வேண்டும் என்பதையும் கண்டுபிடிக்க வேண்டும்.

நாம் கொண்டு வந்த பிராரப்த்த கர்மா எப்படிப்பட்டது என்பது நமக்கு தெரியாது. அது நம் கைவசமும் கிடையாது.

அதே நேரம் நமக்கு ஏற்படும் பிராரப்த்த கர்மாவை, நாமாக முடிவெடுத்து நாமாக நமது சுய விருப்பத்தை கொண்டு எதிர்கொள்ளும் செயல்தான் ஆகாமிய கர்மாவாகும்.

அந்த ஆகாமியம் நமது சஞ்சீதத்தின் கட்டுப்பாட்டிலோ நமது பிராரப்தத்தின் கட்டுப்பாட்டிலோ அல்லது தெய்வங்களின் கட்டுப்பாட்டிலோ கிடையாது.

அது முழுக்க முழுக்க நமது கட்டுப்பாட்டில் மட்டுமே உள்ளது.

நமது முடிவுக்கு மட்டுமே கட்டுப்பட்டது.

நாம் எப்படி முடிவு செய்கிறோமோ அப்படித்தான் நமது செயல் அமைந்துவிடுகிறது,

நமது சூழ்நிலை அமைவுக்கு நமது பிராரப்தம் காரணமாக அமையலாம்.

ஆனால் அதனுடைய கட்டுப்பாட்டில் அமைந்ததல்ல நமது ஆகாமியம்.

அது நமது முடிவுக்கு மட்டும் கட்டுப்பட்டது.

அது வேறு எதற்குமே கட்டுப்பட்டது கிடையாது.

நம்முடைய ஆகாமியம் தான் எல்லா கர்மாவுக்கும் பிறப்பிடமாக அமைந்து எல்லா விதமான மற்ற கர்மாக்களையும் உருவாக்குகின்றது.

ஆனால் ஆகாமியம் என்பது நமது முடிவுக்கு மட்டுமே கட்டுப்பட்டது.

பிராரப்தத்தை சீரமைக்கும் வல்லமை ஆகாமியத்திற்கு மட்டுமே உண்டு. ஆகாமியம் என்பது நம் கைகளிலேயே உள்ளது.

பிராரப்த கர்மாவை வெல்லும் வல்லமை நமது கைகளில் உள்ளது.

பிராரப்த கர்மா நமது கைவசம் இல்லாவிட்டாலும் எல்லாக் கர்மாக்களுக்கும் மூலமான ஆகாமிய கர்மா முழுமையாக நம் கைவசமே உள்ளது.

நமது ஆகாமியம் அனைத்தும் நற்செயலாக அமைந்திடும் பட்சத்தில், அவையே, நமது தீவினைகள் அனைத்துக்கும் மாற்று மருந்தாக அமைந்து விடுகிறது.

ஜாதக ஜோதிடங்கள் அனைத்தும் பிராரப்தத்தை மட்டுமே கணக்கிலெடுத்துக்கொள்ள முடியும். விசேட பயிற்சி பெற்றவர்களால் சஞ்சீத கர்மாவைக்கூட ஓரளவுக்கு கூறிவிட முடியும்.

ஆனால் ஆகாமியத்தை கூற எவராலுமே முடியாது.

ஏனெனில் அது எந்த கணக்கிலும் இதுவரை வந்ததில்லை.

நமது ஆகாமிய கர்மாக்கள் அனைத்தும் நமது பிராரப்த கர்மாவில் குறிக்கிடும் காரணத்தினால், ஜோதிடர்கள், நமது எதிர்காலத்தை பற்றி கூறும் கணிப்புகள் பெரும்பாலும் பொய்யாகி விடுகின்றன; தவறிப் போய் விடுகின்றன.

நமது ஆகாமியம், நேரடியாக பிராரப்தத்தில்தான் பங்கேற்று கொள்கிறது. அது போகவும் எஞ்சியிருக்கும் ஆகாமிய கர்மாக்களே,

சஞ்சித கர்மாவாக,

சேமிப்புக்கு சென்றுவிடுகின்றன.

நற்செயல்களை செய்ய வேண்டும் என்ற முடிவுடன் செய்யப்படும் ஆகாமிய கர்மாக்கள், நற்பலன்களைத் தரும் வகையில் நமது பிராரப்த கர்மாவுடன் இணைந்து விடுகின்றன.

நற்செயல்கள் புரிந்து, நமது பிராரப்த கர்மாவை வகைப்படுத்துவதை விட்டுவிட்டு, பூஜைகள் பரிகாரங்கள் என்று அலைவதானது, கையில் வெண்ணையை வைத்துக் கொண்டு நெய்க்கு அலைவதை போன்றதுதான்.

நற்செயல்களைப் புரியும் ஒருவனுக்கு தெய்வங்கள் கூட தங்கள் உடைகளை இறுக்கிக் கட்டிக் கொண்டு உதவிக்கு ஓடி வரும் என்று வள்ளுவரே இதைப் பற்றி குறிப்பிடுகின்றார்.

குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும் (குறள் - 1023)

பேச்சுவழக்கில் "நல்லதுக்கு காலமில்லை" என்று பலரும் கூறக் கேள்விப்பட்டிருக்கலாம்.

நம்முடைய முன்னோர்கள் அமைத்த பழமொழிகள் பல, புதிர்களை போன்று அமைந்து விட்டதால் ஒவ்வொருவரும் அவர்களது மனதுக்கு ஏற்றவாறு விளக்கத்தைக் கொடுத்து விடுகிறார்கள்.

உண்மையில் இந்தப் பழமொழி நமது நற்செயலுக்கு உற்சாகமூட்டும் ஒன்றாகவே அமைந்துள்ளது.

நாம் ஏதாவது ஒரு செயலை செய்ய ஆரம்பிக்கும்போது நேரம் காலம் பார்த்து ஆரம்பிப்பது வழக்கம்.

ஆனால் "நற்செயலை புரிவதற்கு கால நேரங்களை பார்த்துக் கொண்டிருக்க வேண்டாம்" என்பதை அறிவுறுத்தவே இந்த பழமொழி இப்படி கூறப்பட்டுள்ளது.

நேரம் காலம் பார்க்காமல் நற்செயல்களை செய்திடுவாயாக என்பதுதான் இதன் உண்மையான பொருள்.

நாம் எந்த வகையான நற்செயல்களை செய்து அடுத்தவர்களுடன் உறவை வைத்துக் கொள்ள வேண்டும் என்பதை போதிப்பது தான் அறம்.

அடுத்தவர்களோடு நாம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும்?

இயேசுநாதர் மிகச் சுருக்கமாகவும் அதே நேரம் மிக தெளிவாகவும் இதற்கு விளக்கம் கொடுத்துள்ளார்.

"அடுத்தவர் உன்னிடம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்று எதிர்பார்க்கிறாயோ அப்படியே நீயும் அவர்களிடம் நடந்து கொள்."

இந்த உண்மையைத்தான் தர்மம் - அறம் என்ற மிகப்பெரிய வார்த்தைகளில் சாஸ்திரங்கள் விவரிக்கின்றன.

வார்த்தைகள் நமக்கு முக்கியமில்லை அவற்றின் பொருள் தான் முக்கியம்.

நல்லதையே நினைத்து நல்லதையே செய்திடுவோர் விதியையும் வென்றிடுவர்.



# பாதையில் மலர்ந்த மலர்கள் – "இயற்கையும் இயக்கமும்"

**நிலம் :** பூமி மணிக்கு சுமார் 1000 மைல் வேகத்தில் தன்னைத்தானே சுற்றிக் கொள்கிறது. சூரியனை அதன் சுற்றுவட்டப்பாதையில் ஒரு நாள் ஒன்றுக்கு சுமார் 16 இலட்சம் மைல் சுற்றி ஓடுகின்றது.

**நீர் :** நீரின் இயல்பு பள்ளத்தை நோக்கி பாய்வது நதியாகவும், ஓடையாகவும் ஓடிக்கொண்டே இருக்கும். கடலில் அலையாக ஆர்பரித்துக் கொண்டேயிருக்கும்.

**நெருப்பு :** வெப்பம் பரவிக்கொண்டேயிருக்கும். நெருப்பு என்பது தொடரியக்கம். பூமியின் மையப்பகுதியில் ஏற்படுகின்ற ஓர் அழுத்தம் மேலும் மேலும் கூடும்பொழுது எரிமலையாக வெடித்து நெருப்பு குழம்பு வெளியேறுகின்றது.

**காற்று :** காற்று தான் நகர்வதோடு மட்டுமல்லாமல் பிற பொருட்களையும் நகர்த்தி எறியும் வல்லமை படைத்தது. காற்று கண்ணுக்கு தெரிவதில்லை என்று குறைத்து மதிப்பிட முடியாது. உயிர் வாழ்வதற்கு எவ்வளவு முக்கியம் என்பதும் தங்களுக்கு தெரியும்.

**விண் :** நம் உடலில் உயிரோட்டமாக இயங்கி கொண்டிருக்கின்றது. அதே விண்தான் நமது இயக்கத்திற்கும் காரணமாக இருக்கிறது. விண்ணின் கூட்டுதான் கோள்கள், நட்சத்திரங்கள் அனைத்தும்.

ஆக பூமியின் சுழற்சியால் இரவு பகல் ஏற்படுகின்றது. நீரின் இயக்கத்தால் உணவு உற்பத்தி மற்றும் நமது தேவைகள் அனைத்தும் நிறைவேறுகிறது. இதே போன்று தான் நெருப்பு, காற்று, விண் அனைத்துமே மிக முக்கியமானது. நம் உடலே பஞ்சபூதங்களின் கூட்டுதானே.

மேற்கண்ட ஐந்து பூதங்களின் இயக்கத்தை எப்படி நிறுத்த முடியாதோ அதே போல்தான் இயற்கையின் வெளிப்பாடாகிய எண்ணங்களையும் (thought) நம்மால் நிறுத்த முடியாது. எந்த செயல் செய்தாலும் அவையனைத்தும் அனுபவமாக பதிந்துவிடும். மொத்த அனுபவங்களின் வெளிப்பாடே எண்ணங்கள். எண்ணங்களே வரக்கூடாது என்பது பூமி சுழலக்கூடாது என்பது போன்றது. ஏன் இயற்கையே அசைவற்று இருக்க வேண்டும் என்பதை போன்றது! இயற்கையின் வெளிப்பாடுதானே எண்ணங்கள். இயற்கையை தேவையான இடங்களில் தேவைக்கு ஏற்ப அளவாக பயன்படுத்திக் கொள்வதை போன்று நமக்கு ஏற்படும் எண்ணங்களை தேவைக்கும், சூழ்நிலைக்கும் ஏற்ப பயன்படுத்திக் கொண்டு பஞ்சபூதங்களை அதனதன் பிரவாகத்தில் விட்டுவிடுவதை போன்றே எண்ணங்களையும் விட்டு விடுவதே ஞானம்.

இன்பம் துன்பம் என்பது இரவு பகல் போன்றது. இரவு பகலை எப்படி விருப்பு வெறுப்பின்றி ஏற்றுக் கொள்கின்றோமோ அதே போன்று இன்பம் துன்பம் என்பதும் இயற்கையின் வெளிப்பாடே. இவற்றை ஏற்று பிரவாகமாக விடும்பொழுது ஞானம் வாழ்வியலாகின்றது.

அன்புடன்

மனவளக்கலை பேராசிரியர்
**செ. இரவிச்சந்தர் – 94437 29525**
கூடுவாஞ்சேரி.

V.A.P. **சரவணன்.** சேலம்.
செல் : 99942 05880

# கேள்வி ? பதில்...

## "ஞானம் அடைந்து விட்டோம் என்பதை எவ்வாறு உறுதி செய்வது?"

**கேள்வி :** நான் கடந்த 20 ஆண்டுகளாக ஆன்மிகத்தில் பலவிதமான தியான பயிற்சி முயற்சிகளை மேற்கொண்டு வந்தேன். அதன் விளைவாக ஏதோ ஓர் அனுபவம் கிடைத்தது. ஆனால் அக விடுதலை கிடைக்கவில்லை. பிறகு You Tube வழியாக ஸ்ரீ பகவத் ஐயாவைப் பற்றி தெரிந்து கொண்டு அதன்பின் ஐயாவின் அனைத்து ஞான நூல்களையும் Free Download செய்து படித்தும், ஞான முகாமில் கலந்து கொண்டும் இருக்கிறேன். யதார்த்த வாழ்வில் புரிதலினால் பல நன்மைகளையும் அடைந்திருக்கிறேன். "புரிந்து கொள்ள வேண்டியதை நாம் புரிந்து கொண்டு விட்டோம் என்பதை நம்முள் உறுதி செய்து கொள்ள வேண்டும்" என்று ஸ்ரீ பகவத் ஐயா கூறுகிறார். புரிந்து கொண்டு விட்டோம் என்பதை நான் எவ்வாறு உறுதி செய்து கொள்வது? விளக்கம் தேவை?

**பதில் :** ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள் அனைவருமே கேட்கும் பொதுவான கேள்வி தான் நீங்கள் கேட்டிருக்கும் இந்த கேள்வியும் கூட.

நம்முடைய பல வருட ஆன்மிக பயிற்சி முயற்சியின் மூலம் விடுதலைக்காக எல்லா வகையிலும் முயன்று பார்த்தோம். எதிலும் விடுதலை கிடைக்கவில்லை. இறுதி முடிவாக மனதைப் பற்றிய ஸ்ரீ பகவத் ஐயாவின் புரிதலை தவிர வேறு எதுவுமே இனிமேல் நமக்கு தேவையில்லை என்று முடித்துக்கொள்ள வேண்டும். இதுவே நமக்குள் புரிதலை உறுதி செய்து கொள்வதற்கு உதவியாக அமையும்.

புரிதலை உறுதி செய்து கொள்வது எப்படி என்பதை ஓர் உதாரணத்தின் மூலம் பார்ப்போம்.

கொலை குற்றவாளி ஒருவர் மீது நீதிமன்றத்தில் பல ஆண்டுகளாக வழக்கு தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. இந்த வழக்கை ஆராய்ந்து இறுதியாக குற்றவாளிக்கு மரண தண்டனையை தீர்ப்பாக வழங்கி விட்டு தீர்ப்பு எழுதிய தன்னுடைய பேனாவின் முள்ளை உடைத்து விடும் நீதிபதியின் மன நிலைக்கு நாம் வந்து விட வேண்டும். இதன் பொருள் என்னவென்றால் இந்த தீர்ப்பு சம்பந்தமாக யோசிப்பதற்கு கூட இனி எதுவும் இல்லை என்ற முடிவுக்கு வருவதே ஆகும்.

இதுபோல் புரிந்து கொள்ள வேண்டியதை புரிந்து கொண்டு விட்டோம் என்று முடித்துக்கொள்ள வேண்டும். மேற்கொண்டு நாம் புரிந்து கொண்டதை சந்தேகிக்க கூடாது.

பொதுவாக வாழ்க்கையை நாம் ஆன்மிகம், உலகியல், என்ற இரு பிரிவுகளாக வாழ்ந்து வருகிறோம். புரிதலை உறுதி செய்துகொண்ட பிறகு ஆன்மிகம் என்ற பகுதிக்கு முற்றுப்புள்ளி வைத்து விடுகிறோம். உலகியலை முழுமையாக வாழ்வதற்கான வழிமுறைகளை கற்றுத் தருவதற்காக உருவாக்கப்பட்டது தான் ஆன்மிகமே.

வாழ தெரிந்துகொள்ள வேண்டிய விஷயங்களை தெரிந்துகொண்டு நாம் வாழும் வாழ்க்கையை தெளிவாகவும் நிறைவாகவும் வாழ்வதற்குதான் அத்தனை ஆன்மிக பயிற்சி முயற்சிகளுமே கொடுக்கப்பட்டுள்ளன.

நாம், ஞானத் தெளிவில் உறுதி பெறுவதற்கு மனதைப் பற்றிய பகவத் ஐயாவின் புரிதலை தவிர வேறு எதுவும் உதவாது என்பதை முதலில் உறுதிப்படுத்திக்கொள்வோம். புரிந்து கொண்டு விட்டோம் என்பதை எவ்வாறு உறுதி செய்வது என்பதை இனி பார்ப்போம்.

என்னுடைய வாழ்க்கையில் வெவ்வேறு காலகட்டத்தில் நடந்த ஒரே மாதிரியான இரண்டு நிகழ்வுகளை என்னுள் எவ்வாறு பார்த்தேன் என்பதை கூறுகிறேன். அதன் முலம் நான் புரிதலை எவ்வாறு உறுதி செய்து கொண்டேன் என்பதை கூறினால் அது மற்றவர்கள் தங்களுக்குள் புரிதலை உறுதி செய்து கொள்வதற்கு உதவியாக இருக்கும்.

இனி அந்த இரண்டு நிகழ்வுகள் என்ன என்பதை பார்ப்போம்.

ஒரு பத்த ஆண்டுகளுக்கு முன்பு எனது மூத்த மகன் ஏழாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்தான். அப்போது அவனுக்கு பள்ளி வகுப்பில் போர்டில் எழுதும் எழுத்து தெரியவில்லை என்று கூறினான். அதற்காக

கண் டாக்டரை சந்தித்தேன். பிறகு அவன் டிவி பார்ப்பதை தடுத்தது, அதனால் எனக்கும் அவனுக்கும் இடையே இடைவெளி ஏற்பட்டது போன்ற விபரங்களை நமது பகவத் பாதை மார்ச் 2013 இதழில் ஏற்கனவே கேள்வி பதில் பகுதியில் கட்டுரையாக வெளிவந்திருக்கிறது.

அந்த கேள்வி - பதில் கட்டுரையை ஒரு முறை படித்து கொள்ளவும். இது நிகழ்வு ஒன்று.

இப்பொழுது அதே பள்ளியில் இளைய மகன் பத்தாம் வகுப்பு படித்துக் கொண்டிருக்கிறான். இப்போது அவனுக்கு பள்ளி வகுப்பில் போர்டில் எழுதும் எழுத்து தெரியவில்லை என்று கூறினான். அதே கண் டாக்டரை சந்தித்தோம். இது நிகழ்வு இரண்டு.

இந்த இரண்டு நிகழ்வையும் புரிதலின் மூலம் நான் எவ்வாறு எதிர்கொண்டேன் என்பதை இனி பார்போம்.

முதல் நிகழ்வின்போது, "நான் கூறியபடிதான் என்னுடைய மகன் நடந்து கொள்ள வேண்டும்" என்ற அகங்காரம் (Ego) தன்முனைப்பு எனக்குள் இருந்தது. அதனால் எனது மகன், மனைவி மற்றும் குடும்பத்தினர் என அனைவருமே நான் கூறியபடி நடந்து கொள்ள வேண்டும் என்பதில் பிடிவாதமாக இருந்தேன். இதனால் எனக்கும் மகனுக்கும் இடையே மிகப்பெரிய இடைவெளி ஏற்பட்டது. கொஞ்ச நாட்களுக்குப் பிறகுதான் தவறு என் மீது என்பது புரிந்தது. "சிறுவனான அவனிடம் நான் இவ்வளவு கடுமையாகவும் பிடிவாதமாகவும் நடந்து கொள்வது தவறு. அவனுக்கு தேவையானவற்றை செய்யும் பொறுப்புள்ள தந்தையான நான்தானே சரியாக நடந்து கொள்ள வேண்டும்" என்பதும் விளங்கியது.

மகனுக்கும் எனக்கும் இடையேயான இடைவெளி மீண்டும் பழைய நிலைக்குக் கொண்டு வர வேண்டும். அதற்கு நான் தான் என்னுடைய பிடிவாத அணுகுமுறையிலிருந்து அவனுக்கு உதவும் புதிய அணுகுமுறைக்கு மாற வேண்டும் என்பதும் புரிந்தது. நான் உருவாக்கிய பிடிவாதத்தை நானேதான் உடைக்க வேண்டும் என்பதும் புரிந்தது. பிறகு என்னுடைய பிடிவாதத்தையும் தன்முனைப்பையும் தரை இறக்கி வைத்துவிட்டு மகனுக்கு தேவையானவற்றை வாங்கிக் கொடுத்து சமாதானப்படுத்தி மீண்டும் பழைய நிலைக்கு கொண்ட வந்தேன். இதற்கு எனக்கு ஆறு மாதங்கள் தேவைப்பட்டது.

இப்படி முதல் நிகழ்வினால் ஏற்பட்ட மன பாதிப்பிலிருந்து மீண்டும் மனம் சமநிலை அடைவதற்கு ஆறுமாத காலம் தேவைப்பட்டது.

இப்போது இரண்டாவது நிகழ்வு என்ன என்பதைப் பார்ப்போம்.

இரண்டாவது மகனும் அதே பள்ளிக்கூடம் எந்த வித்தியாசமும் இல்லை. வகுப்பில் போர்டில் எழுத்து தெரியாத அதே பிரச்சினை. அதே டாக்டரிடம் அழைத்துச் சென்றேன். அப்பொழுதும் இப்பொழுதும் நானே அழைத்துச் சென்றேன்.

முன்பு முதல் நிகழ்வை நான் எதிர்கொண்ட விதத்திற்கும் இப்பொழுது அதே மாதிரியான இரண்டாவது நிகழ்வை நான் எதிர்கொள்வதற்கும் நூறு மடங்கு மாற்றத்தை என்னுள் உணர்ந்தேன்.

இரண்டாவது நிகழ்வு என்னை பாதிப்படையவே செய்யவில்லை. முடிந்த அந்த நிகழ்வுக்கு நான் என்ன செய்யவேண்டும், எந்த வகையில் அவனுக்கு தேவையான உதவிகளை செய்வது? என்பதைத் தவிர வேறு எதுவும் எனக்கு தோன்றவில்லை.

முதல் சம்பவத்தினால் ஏற்பட்ட தன்முனைப்பு, நான் பிடித்ததே சரி என்ற பிடிவாதம், பிறகு என்னுடைய தவறை நானே உணர்ந்து தோல்வியை மனப்பூர்வமாக ஏற்றுக்கொண்டு சமநிலை அடைவதற்கு ஆறு மாத காலம் தேவைப்பட்டது.

இரண்டாவது நிகழ்வுகளின் வெளித்தோற்றத்தில் எந்த வித்தியாசமும் இல்லை. எனக்குள் புரிதலை உறுதி செய்து கொண்டதின் விளைவாக நான் என்னுடைய முதல் நிகழ்விற்கும் இரண்டாவது நிகழ்விற்கும் நூறு மடங்கு மாற்றத்தை அடைந்திருக்கிறேன். இரண்டு மகன்களிடமும் என்னுடைய அணுகுமுறை முற்றிலுமாக மாறி இருக்கிறது.

இரண்டாவது நிகழ்வை வேறு ஒரு பரிமாணத்தில் பார்க்கக்கூடிய ஒரு தன்மைக்கு நான் மாறி இருந்தேன். முதல் நிகழ்வுக்கு ஆறு மாதத்தில் ஏற்பட்ட மாற்றம் இரண்டாவது நிகழ்வுக்கு ஒரு வினாடிக்கு முன்பாகவே மாறிவிட்டது.

இப்படி மட்டும் தான் நமது புரிதலை நம்மால் உறுதி செய்து கொள்ள முடியும். அதனால் இந்த இரண்டு நிகழ்வுகளையும் நான் எப்படி புரிந்து கொண்டேன் என்பதை உங்களுக்கு தெரிவித்திருக்கிறேன்.

வாழ்க்கையில் எவ்வளவு மோசமான பாதிப்பை ஏற்படுத்தும் நிகழ்வாக இருந்தாலும் அதனால் ஏற்படும் பாதிப்பிலிருந்து விடுபட்டு சாதாரண நிலைக்கு திரும்புவது தான் மிகவும் முக்கியம்.

உங்கள் வாழ்க்கையில் நடந்த, நடக்கும் நிகழ்வுகளில் எவ்வளவு நேரம் போராட்டத்துடன் இருந்தீர்கள். பிறகு எவ்வளவு விரைவாக அதில் இருந்து வெளியே வந்தீர்கள் என்பதை கொண்டு உங்களின் புரிதலை உறுதி செய்து கொள்ள முடியும்.

இந்த மாற்றங்கள் மற்றவர்களுக்கு தெரிய வேண்டும் என்ற அவசியமில்லை.

உங்களுக்குள் நீங்கள் உணர்ந்து கொண்டால் போதும்.

**புரிதலில் உறுதி என்பது வெளியே இல்லை. உங்களுக்குள் நீங்களாக உறுதி செய்து கொள்வது.**

# ஆசிரியர் பகுதி



**K.S. ஜீவமணி**
செல் : 97891 65555

அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்.

நம் அனைவருடைய வாழ்வின் பொதுவான இலக்கு என்ன?

பிரச்சினை இன்றி நிறைவாக வாழ வேண்டும் என்பதே.

பிரச்சினைக்கான காரணிகள் வெவ்வேறாக இருக்கலாம்.

உடல்நலம், பொருளாதாரம், தொழில் போட்டி, சமூக உறவு, எதிர்காலம் பற்றிய பயம், அங்கீகாரம், புகழ் இப்படி இதில் எதைச் சார்ந்து வேண்டுமானாலும் ஒருவருக்கு பிரச்சினை இருக்கலாம்.

ஆனால் அனைவரின் மைய நோக்கமும் பிரச்சினையின்றி நிறைவாக வாழ வேண்டும் என்பதே.

பிரச்சினை இல்லாத வாழ்க்கை என்பது சாத்தியமா?

உண்மையில் பிரச்சினையும் நமது வாழ்வும் ஒன்றை ஒன்று பிரிக்க முடியாதபடி ஒன்றோடு ஒன்று பிணைந்து பிரச்சினை தான் வாழ்க்கை என்பது போல் அமைந்துள்ளன.

அப்படி எனில் பிரச்சினைகளில் இருந்து விடுபட்டு வாழ்வதற்கு வாய்ப்பே இல்லையா?

நமது குழந்தைப் பருவத்தில் கள்ளங்கபடமற்ற தன்மையில் நமக்கு எந்த பிரச்சினையும் இருந்ததில்லை.

அப்படி எனில் குழந்தை தன்மையின் மனநிலைக்கும் பெரியவர்களின் தற்போதைய மனநிலைக்கும் உள்ள வேறுபாடு என்ன?

உண்மையில் அறிவு தான் வேறுபாடு.

அப்படி எனில் அறிவு அத்தியாவசியமானதா? ஆபத்தானதா,

அறிவு அத்தியாவசியமானதே.

- இது நமது புறச் செயலை பொறுத்தவரை.

இதே அறிவு நம் அக உணர்ச்சிகளையும் அனுபவங்களையும் நிர்வாகம் செய்யும் பொறுப்பை கையில் எடுக்கும் போதுதான் ஆபத்தானதாக மாறுகிறது.

நம் அறிவு அகத்திலும் புறத்திலும் எப்படி இருக்க வேண்டும்?

அகத்தைப் பொறுத்தவரை நமது உணர்ச்சிகளையும் அனுபவங்களையும் நிர்வாகம் செய்யும் எந்த வேலையும் அறிவுக்கு இல்லை. அவை தாமாக தோன்றி தாமாக மறையும் நிழலைப் போன்றவை. இங்கு அறிவு அகச் சரணாகதி அடைவதே முக்கியம்.

ஆனால் புறச் செயலை பொறுத்தவரை நெறிமுறைகள் தேவைப்படுகின்றன. செய்ய வேண்டியவை செய்யக் கூடாதவை என உள்ளது. ஆகவே அதற்கு வழிகாட்ட அறிவு, புத்தி தேவைப்படுகிறது.

புறச் செயலை பொறுத்தவரை அறிவு திறம்பட திட்டமிடுதலும் செயல்படுதலும் வேண்டும்.

இப்படி புறச் செயலுக்காக உருவானதுதான் நமது அறிவு, புத்தி.

அப்படி உருவான நம் அறிவு நம் மனதையும் நிர்வாகம் செய்ய முயன்று தான் நமது வாழ்க்கையையே போர்க்களமாக ஆக்கிவிட்டிருக்கின்றது.

இப்படி நாம் இழந்துவிட்ட குழந்தைத் தன்மையை மீட்டெடுக்க வந்தது தான் ஆன்மிகம் என்பது.

ஆன்மிகத்தின் ஆரம்பக்கட்ட நிலை தான் இறை வழிபாடு, பக்தி, யோக சாதனைகள் அனைத்தும்.

ஆரம்ப நிலைக்கு பக்தியும் தியானம் போன்ற யோக சாதனைகள் அனைத்தும் தேவையே.

இதன் அடுத்த கட்டமாக ஆன்மிகத்தின் உயர்ந்த நிலையும் முடிவான நிலையுமான சரணாகதியே நமக்கு விடுதலையை தரவல்லது.

அறிவு அகச் சரணாகதி அடைந்த நிலையில் அங்கு எந்த பிரச்சினையும் தங்கி இருக்கப் போவதில்லை. அனைத்தும் மனதின் இயற்கையான விடுதலை இயக்கத்தோடு இணைந்து பிரவகித்து விடுகிறது. இதுவே மனதின் இயற்கையான நிலை. இந்நிலை பெற்றவர்கள், எல்லா பிரச்சினைகளையும் எளிதாக எதிர்கொண்டு கடந்துவிடுகிறார்கள்.

இந்த அகச் சரணாகதியை வழங்கும் புரிதலை தான் நமது ஸ்ரீ பகவத் மிஷன் மூலம் நாம் அனைவருக்கும் வழங்கிக் கொண்டிருக்கிறோம்.

இந்த வகையில் நமது ஸ்ரீ பகவத் ஐயா அவர்களால் ஞானத் தெளிவு பெற்று அகச் சரணாகதியடைந்து விடுதலையோடு வாழ்ந்து வருபவர்கள் பலர் இருக்கிறார்கள்.

இதன் தொடர்ச்சியாக வருகின்ற ஆகஸ்ட் மாதம் 15ஆம் தேதி முதல் 18 ஆம் தேதி வரை சேலம் ஸ்ரீ பகவத் பவனில் நான்கு நாள் ஞான முகாம் ஒன்று நடைபெற உள்ளது.

இதில் வாய்ப்புள்ள அன்பர்கள் கலந்து கொண்டு பயனடையுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

# நிகழ்ச்சி நிழல்கள்


ஞான உறுதி முகாமில்


ஞானத்தின் பிரம்மாண்டம் எளிமையின் திருவுருவமாய்...


Ultra Mind வகுப்பின் போது அஃகு ஹீலர் அ.உமர்பாரூக் அவர்களுடன் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள்

**சிறுகதை எழுத்தாளர் தி ஸ்ரீ அவர்கள் தன்னுள் ஞானத்தை உணர்ந்த நொடியில் ஐயாவைப் பற்றி...**

வயதில் பெரியவர்...
அனுபவத்தில் பழுத்தவர்...
ஞானத்தில் முதிர்ந்தவர்...
எளிமையான தோற்றம்...
ஆழ்கடலின் அமைதி...
அடர்மூடுபனியின் மௌனம்...
தோண்டத்தோண்ட
வேண்டுவதை அள்ளித்தரும்
அறிவுச்சுரங்கம்...
எவரையும் காயப்படுத்தாத பண்பு...
தெரிந்ததை தெளிவாக விளக்கும்
கலங்கரை விளக்கு...
தெரியாததை தெரியாதென
ஒப்புக்கொள்ளும் பேராண்மை...
இவையனைத்தும் ஒருங்கே
அமைந்த
பெருந்தகையாளர்
நமது ஸ்ரீ பகவத் அய்யா.

ஆயிரமாயிரம் ஆண்டுகளாய்
மர்மப்படுத்தியே அந்நியமாக்கிய
நமது இயல்பு நிலையை
அவிழ்த்து, அம்பலமாக்கி
எளியவனுக்கும் உண்டு
ஞானவிடுதலை
என முரசறைந்தவர்.

இவரைக் கண்டவுடன்
எவருக்கும்
வணங்கத் தோன்றும்.

அவர் பாதம் தொட்டு
பணியத்தோன்றும்.

அவர் ஆசி பெற
உள்ளம் விழையும்.
அவர் வாழும் காலத்தில்
நாமும் வாழ்ந்தோம் என்ற
திருப்தி தோன்றும்.

அடைவதற்கு
இனி எதுவுமில்லை.

செல்வதற்கு
இனி எந்த இடமும் இல்லை.

அனைத்தும்
உன்னிடமே
உள்ளதென
உணர்த்தியவர்.

என்னை
எனக்கு
மீட்டுக் கொடுத்தவர்.
அவர் பாதம் பணிந்து
என்னை
முழுமையாக்கிக் கொள்கின்றேன்.

# ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு ஒரு மகிழ்வான அறிவிப்பு

நமது ஸ்ரீபகவத் பவன் ஆசிரமம், சேலம், பெரிய கவுண்டாபுரம், கொடம்பக்காட்டில் இயற்கை எழில் மிகு ஜருகு மலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளது.

இங்கு ஒவ்வொரு மாதமும் **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்களின் ஞான முகாம் நடைபெற்று வருகிறது. இதில் பலரும் கலந்து கொண்டு ஞானியாக திரும்பிச் செல்கின்றனர்.

மேலும் ஞான முகாமிற்கு வரும் அன்பர்கள் பலர் குடும்பத்துடன் வரவே விரும்புகின்றனர்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களும் அனைவரும் குடும்பத்துடன் வந்து கலந்து கொள்வதையே விரும்புகிறார்.

ஆனால் குடும்பத்துடன் வரும் அன்பர்களுக்கு தனியறை வழங்கும் அளவிற்கு நம்மிடம் போதிய இடவசதி இல்லை. இதனை பூர்த்தி செய்யும் வகையில் ஐயாவின் ஆலோசனைப்படி நமது அன்பர்களின் விருப்பத்திற்கு இணங்க குடும்பத்துடன் தங்கி செல்ல வசதியான **30 தனி அறைகளை** எல்லா வசதிகளுடன் இயற்கை சூழலோடு கட்ட முடிவு செய்துளோம்.

ஒரு மனிதன் இயற்கையுடன் இணைந்து ஆரோக்கியமாக வாழ்வதற்கு மாசற்ற காற்று, தூய்மையான மழை நீர், இயற்கை உரத்தில் விளைந்த இரசாயனமற்ற உணவு இவை அனைத்தும் தேவை. நாமும் இங்குள்ள இயற்கை வளத்தைக் காக்கும் வகையில் பல புதிய பணிகளை செய்து வருகிறோம். தற்போது மழை நீரையே குடிநீராகவும் சமையலுக்காகவும் வருடம் முழுவதும் பயன்படுத்தி வருகிறோம். மேலும் மழை நீரை வீணாக்காமல் நிலத்தடி நீராக சேமிக்கும் வகையில் சில பணிகளை செய்திருக்கிறோம்.

இதனால் இயற்கை வளம் அனைத்தும் ஒருங்கிணைந்த இடமாக நமது ஸ்ரீபகவத் பவன் அமைந்துள்ளது.

மேலும் ஒரு ஞானியின் அருகாமையில் அவருடன் இணைந்து வாழ்வதற்கான வாய்ப்பு கிடைப்பது மிகவும் அரிது. அந்த அரிய வாய்ப்பு இங்கு தங்கிச் செல்லும் அனைவருக்கும் கிடைக்கும்.

நாம் இங்கு அமைக்கவிருக்கும் 30 தனி அறைகளில் தேவையானவற்றை விருப்பமுள்ளவர்கள் தங்களுக்குச் சொந்தமாக வாங்கி கொள்ளலாம். இதன் விலையாக ஓர் அறைக்கு ரூபாய் 5 லட்சம் என நிர்ணயம் செய்துள்ளோம். இதனை சொந்தமாக வாங்கி கொண்டவர்கள் தங்களது விடுமுறை நாட்களிலும் ஓய்வு நாட்களிலும் குடும்பத்துடன் வந்து தங்கிச் செல்வதோடு ஞானியின் அருகாமையில் தங்கி அவருடன் உரையாடி ஞானத் தெளிவு பெறுவதற்கும் இயற்கை வளத்தை ரசித்து அனுபவித்து ஆரோக்கியமாக வாழ்வதற்கும் ஏற்ற இடமாகவும் இது அமைந்துள்ளது.

விருப்பம் உள்ள அன்பர்கள் இதனை வாங்கி பயன்பெறலாம்.

இந்த முப்பது அறைகளின் மூலம் வரும் உபரி தொகையை மூலதனமாக கொண்டு ஸ்ரீ பகவத் மிஷன் வளர்ச்சிப் பணிகளையும் சென்னை ஸ்ரீ பகவத் பவன் கட்டட பணிகளையும் நிறைவு செய்யலாம் என முடிவு செய்துள்ளோம்.

30 அறைகள் மட்டுமே கட்ட இருப்பதால் தேவைப்படுவோர் தங்களது தேவைகளை முன்கூட்டியே தெரிவிக்குமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். அறையை வாங்கியவர்கள் எப்போது வேண்டுமானாலும் வாங்கிய விலைக்கு மிஷன் மூலமாக மற்றவர்களுக்கு விற்றுக் கொள்ளலாம். எனவே இத் தொண்டில் ஆர்வமுள்ளவர்களும் வாய்ப்பு உள்ளவர்களும் நம்மோடு தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

தொடர்புக்கு

**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-3.

**99942 05880, 97891 65555**




அவர் ஓர் விஞ்ஞானி, இயற்கையைப் பற்றிய பல நுட்பமான ஆராய்ச்சிகளை மேற்கொண்டு வந்தார். அவரது ஆராய்ச்சியின் முடிவாக ஐந்து பூதங்களும் உடலில் இயங்கும் தன்மையையும், மனதையும் தனித்தனியாகப் பிரித்து ஆராய்ந்து பல அரிய தகவல்களை விஞ்ஞான கருவிகளின் துணைகொண்டு கண்டுபிடித்தார். மற்ற விஞ்ஞானிகளுக்கு இவரது ஆய்வு தகவல்கள் திருப்தியை அளித்தது.

ஆனால் அவரது ஆய்வு பூர்த்தி அடையவில்லை. இவை அனைத்தையும் சதா சர்வமும் இயக்கும் ஆதார ஆற்றலை கருவிகளைக் கொண்டு கண்டுபிடிக்க முடியவில்லை. இது விஞ்ஞானிக்கு பெரிய சவாலாக இருந்தது. அவரை தூங்க விடவில்லை.

எல்லாவற்றிற்கும் ஆதாரமான ஆற்றலை எந்த

கருவியையும் கொண்டு கண்டுபிடித்து நிரூபிக்க முடியவில்லையே என தவித்தார்.

நாட்கள் ஓடின, வயது கூடியது. உடல் தளர்ந்தது. கருமுடி வெள்ளையாக மாறியது. முதுமை தொடங்கியது. தனது ஆய்வுக்காக எடுத்துக்கொண்ட நெடுநாள் பயணத்தை திரும்பிப் பார்த்தார்.

"இவ்வளவு நாட்கள் கடந்தும் முடிவு தெரியவில்லையே" என்ற மன வருத்தம் அவரை மிகவும் வாட்டியது.

"அறிவியலுக்கு ஆதாரமானவைக்கு மெய்ஞானத்தில் தான் விடை கிடைக்கும்" என்பதை பல மூத்த விஞ்ஞானிகள் கூறி இருப்பதை உணர்ந்தார்.

விஞ்ஞானத்தின் எல்லையை கண்ட அவர். முதன்முதலாக ஒரு மெய்ஞானியை காண சென்றார்.

அந்த மெய்ஞானியின் தோற்றமோ மிகவும் எளிமையாக இருந்தது.

"இவரால் நமது கேள்விக்கு பதில் அளிக்க முடியுமா?!" என்ற நம்ப முடியாத தன்மையில் தான் விஞ்ஞானி இருந்தார்.

இருந்தாலும் வேறு எந்த வழியும் தெரியாத நிலையில் ஞானியை அணுகி, "உங்களால் இதற்கு ஏதாவது விடை கூற முடியுமா?" என்றார்.

"ஐந்து பூதங்களும், மனதும் எதை ஆதார சக்தியாக கொண்டு இயங்குகிறது என்பதை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும் அப்படித்தானே?" என்றார் ஞானி.

"ஆமாம். எனக்கு எப்படியாவது நீங்கள் தான் அதை உணர்த்த வேண்டும்" என்று மனம் உருகி கேட்டுக்கொண்டார்.

"சில காலம் என்னோடு தங்கி செல்லுங்கள்" என்றார் ஞானி. மேலும், "புற கருவிகளை முழுவதுமாக தவிர்த்து விட்டு, உங்களது அக கருவியான மனதை கொண்டே உங்கள் ஆராய்ச்சியில் ஆழ்ந்துச் செல்லுங்கள்" என்றார்.

"ஏன் சுவாமி?" என்றார் விஞ்ஞானி.

"புறக் கருவிகள் அனைத்தும் ஓர் எல்லைக்கு உட்பட்டது. எல்லைகளை கடந்தவற்றை அதற்கு காட்ட தெரியாது. ஆனால் மனம் எல்லைகளைக் கடந்தது" என்றார் ஞானி.

விஞ்ஞானி ஆராய்ச்சி கருவிகள் அனைத்தும், தவிர்த்த நிலையில், தன் அகத்தை கவனிக்கத் தொடங்கினார்.

மூங்கில்கள் முழுவதுமாக சூழ்ந்த அந்த காட்டின் மையப்பகுதியில் அமைந்திருக்கும் பாறையில் அமர்வதுதான் அவர்களது தினசரி நடவடிக்கை, கனத்த மௌனம், வெளிசூழ்நிலையோடு தன்னை அப்படியே பொருந்திக் கொள்ளும் மன நிலை, என அப்படி அங்கேயே அமர்ந்து தன்னை மறந்து இயற்கையோடு இயற்கையாக இணைந்து விடுவார் ஞானி, இவருடன் விஞ்ஞானியும் மௌனமாக அமர்ந்திருப்பார்.

தினமும் ஆசிரமம் திரும்பும்போது விஞ்ஞானி ஞானியிடம், தனது மைய கேள்வியான "ஆதாரமான ஆற்றலை எப்படி உணர்வது? நீங்கள் எப்படி உணர்ந்திருக்கிறீர்கள்? அதை எனக்குத் தெரிவியுங்கள்" என காலை மாலை தொடர்ந்து கேட்ட வண்ணம் இருப்பார்.

ஞானி புன்னகை மட்டுமே விடையாக கொடுத்து கலைந்து செல்வார்.

கொஞ்ச நாட்களுக்கு பிறகு, "உங்களுடன் இந்த நடைபயணம் என் மனதிற்கு நிறைவைத் தருகிறது. அதே நேரம் என் நெடுநாள் கேள்வியான அனைத்திற்கும் ஆதார ஆற்றலை கண்டு பிடிக்க முடியவில்லையே என்ற மன வருத்தமும் உள்ளது. நீங்கள்தான் எனக்கு உணர்த்த வேண்டும்" என்றார் விஞ்ஞானி,

"அனைத்திற்கும் ஆதார சக்தி ஒன்றே. அந்த ஆதார ஆற்றலை பிரித்து உணர்வே முடியாது. ஆதார சக்தியில் இரட்டை தன்மையே இல்லை. இருப்பது ஓர்மை மட்டுமே. ஆதார ஆற்றலோடு நீ இணைந்து இருக்கிறபோது உன்னை தனிமைப்படுத்தி உன்னால் உணரவே முடியாது. அப்படி உன்னை நீ தனிமைப்படுத்தி உணர்கிறாய் என்றால், அப்பொழுது நீ ஆதார ஆற்றலிருந்து விலகி உன்னுடைய "நான்" தன்மைக்கு வந்துவிட்டாய் என்பதே பொருள்" என்றார் ஞானி.

விஞ்ஞானியிடம் இருந்த கேள்விகள் குறைந்து கொண்டே வர தொடங்கின.

ஒரு நாள் மூங்கில் காட்டில் அமர்ந்திருக்கும் போது, மீண்டும் அதே கேள்வியைக் கேட்டார். "அனைத்திற்கும் ஆதாரமாக ஆற்றலை எப்படி உணர்ந்து கொள்வது?"

உடனே ஞானி, "இந்த மூங்கிலாக மாறிவிடு" என்றார்.

ஞானியின் இந்த வார்த்தை விஞ்ஞானிக்கு இதுவரை தான் சேர்த்து வைத்த அனைத்து கருத்துகளையும் தகர்த்தெறிந்தது.

ஒரு கனத்த மௌனத்திற்கு பிறகு தன்னுள், "நானே ஆதார ஆற்றலாக இருக்கும் போது எனக்கு நான் என்ற தன்மை இருக்காது. நான் என்ற தன்மை எனக்கு இருக்கும் போது அது ஆதார ஆற்றலாக இருக்காது" என்ற உண்மையை உணர்ந்துகொண்டார்.

தன்னுடைய இத்தனை ஆண்டு கால ஆய்வும் ஒரு முடிவான நிலைக்கு வந்ததை உணர்ந்தார்.

"மூங்கிலாக மாறி விடு" என்ற ஞானியினுடைய வார்த்தையின் உட்பொருளை உணர்ந்து கொண்டார். தானே ஆதார ஆற்றலாக இருந்து கொண்டு எப்படி உணர்வது! அனைத்தும் ஆதார ஆற்றலின் வெளிப்பாடுதான். ஒரு வெளிப்பாடு தேடி தன் மூலத்தை அடைய முடியாது. அது எதையும் தேடாமல் அதுவாக இருக்கும்போது அதுவே ஆதார ஆற்றலின் பகுதியே என்று உணர்ந்து கொண்டார் விஞ்ஞானி.

விஞ்ஞானம் கொடுக்காத மனநிறைவை மெய்ஞானம் கொடுத்தது.

ஆதார ஆற்றலை உணர்ந்த நிலையில் தங்களையும் மறந்து இருவரும் ஆனந்தமாக வாய்விட்டு சிரித்தனர்.

**விஞ்ஞானம் மெய்ஞானத்தில் சரண் புகுந்தது. மெய்ஞானம் தன்னில் ஒரு பகுதியாகவே விஞ்ஞானத்தை பார்த்தது.**

**Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 | Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020**
**Date of publication : First Week of Every Month | Posted at Salem HOP 636001. On 10th of every month.**

**Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.**
**Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555**